உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௮.] விஷு ௵ ஐப்பசி ௴ [பகுதி-௧௨.
Vol. 38. October — November 1941. No. 12.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.
1941.

Printed by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி–௩௮.] விஷு ஹ ஐப்பசி மீ [பகுதி–௧௨.

Vol. 38. October—November 1941. No. 12.

## கம்பராமாயணசாரம்

[ராவ்சாகிப் ஸ்ரீ. வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

௪௫௬-ஆம் பக்கத் தொடர்ச்சி.

### மூலபலவதைப்படலம்.

இராவணனுடைய மூலப்படையையும் அவன் ஆணைப்படி பல திசைகளிலிருந்தும் பாதாளத்திலிருந்தும்வந்த படைகளையும் இராமன் ஏகனாய் வதைத்ததைக் கூறுவது. (பலம் - படை.)*

#### இராவணன், வெளியேயிருந்துவந்த படைகளையும் இலங்கையிலிருந்த மூலப்படையையும் இராமலக்குமணர்மேலேவித் தான் வேறுபடைகளுடன் வானரப்படைமேற் செல்லல்.

இராவணன், (முன் 'அற்பமனிதருடனும் குரங்குகளுடனும் பொருதல் கவுரவக்குறைவென்று பொருதேனில்லை' என்றவன், இப்போது, விரைவாகக் காரியமாகவேண்டுமென்றுகருதி, அந்தக் கவுரவத்தைப் பாராட்டாதவனாகிச்) சேனாபதிகளைநோக்கி '("பகைவரை அழித்தல் எங்கள்கடன்" என்றீர்கள். அதில் நானும் ஒரு

* 'பலம் - சேனை; சேனைகள் - காட்டுப்படை, நாட்டுப்படை, துணைப்படை, பகைப்படை, மூலப்படை, கூலிப்படை என்று அறுவகைப்படும். இவற்றுள் மூலப்படையாவது-தொன்றுதொட்டுவருஞ் சேனை.' வை. மு. கோ.

## திருக்கோட்டியூர்த்

# திருமாமகள் நாச்சியார் கலிவெண்பா*

1 சீருலவு விண்ணவருஞ் சீதரனும் வாலியுமிப்
பாருலகில் வந்ததிருப் பாற்கடலில் - ஊருரகம்

2 நாணாக மந்தரமே நாட்டி யொருநாளுங்
காணா அமுதங் கடைந்தெடுக்கப் - பூணாள்நீ

3 வந்துதித்த பின்னருன்னை மாயன் மணந்தன்றே
இந்த உலகுக் கிறையானார் - சந்தப்பூ

4 மானே நினதருளின் வண்மையினால் மாமலரோன்
தானே யுலகந் தனைப்படைத்தான் - ஆனேறு

5 பெற்றோனா நின்னருளைப் பெற்றே யுலகனைத்தும்
உற்றோர் கணத்தில் ஒழித்துவிட்டான் - கற்றறிநூற்

6 பாவேந்த ரும்வேற் படைவீர ருங்கடல்சூழ்
பூவேந்த ரும்மதவேள் போல்வாரும் - தேவேந்

7 திரனும்நம னும்வந் திடினும் அதிரா
உரனுடைய சிந்தையுடை யோரும் - திரிகிரணச்

8 சந்த்ரா திபரும் தனபதியும் ஏழ்கோடி
மந்த்ரா திபரும் மறையோரும் - வந்துனது

9 முன்புபணி கின்றார் முறைமையினா லுன்கடைக்கண்
அன்புபெறு கின்றா ரவரன்றோ - வெம்புவியூ

10 டாடிய காடுமலை யானாலும் நீயிருந்தாற்
கோடிபொன்னு முத்துங் கொழிக்குமன்றோ - நீடுபரி

---

* இதனையியற்றியவர்பெயர் முதலிய ஒன்றும் தெரியவில்லை. பழைய ஓலைச்சுவடியிலிருந்து சென்னைப்பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சியாளர் திரு. மு. அருணாசலம்பிள்ளை, M.A., அவர்கள் எழுதியனுப்பியபடி வெளியிடலாயிற்று. உதவியாசிரியர்.

11 சந்நாடு நீயிருந்த தன்மையினு லல்லவோ
பொன்னுடென் ரூரும் புகல்கின்றூர் - பன்னியநின்

12 பைந்தமிழைத் தார்புனைந்த பத்திரத்தை வைத்திடினும்
அந்தமனை யாள்கையி லா(ெ)மன்றே - செந்திருவே

13 என்று குறுமுனிவ னேத்த அருளருளும்
மன்றல் மலர்க்கமல மாமாதே - வென்றிமதன்

14 தாயேநின் னன்பு தருவாய் பெருவாழ்வு
நீயே துணையென்று நேசித்தேன் - தூயதமிழ்

15 ஆராயுங் கோட்டிநகர் ஆளவந்த மிக்கசொக்க
நாரா யணர்புரத்து நண்ணியே - போரான

16 அந்தரியீ ரேழுலகை ஆண்டதிரு மாமகளாஞ்
சுந்தரிநின் தாளே துணை.

---

# பிழையும் திருத்தமும்

செந்தமிழ் ௩அ-ஆந்தொகுதியின் ௧௦-ஆம் பகுதியில் (நிகழும் விஷு வருட ஆவணிமாதச் செந்தமிழில்) வெளிவந்த மெய்ப்பாடு என்ற பொருளுரையுள்,

௪௬௬-ஆம் பக்கத்து உ௩-ஆம் வரியில் வருத்தம். என்றிருப்பதை வருத்துந்தெய்வம். என்று திருத்திக்கொள்க.

௪௬எ-ஆம் பக்கத்து உ௫-ஆம் வரியாகவுள்ள இதுவுமது. என்பதன்பின் கோலை-ஈண்டு வாக்கைக்கோன்றுரைத்தல்.-என்பதைச் சேர்த்துக்கொள்க.

இங்ஙனம்,
சி. கணேசையர்.

---